உ

குமரன்றுணை.



# திருச்செந்தூர்

# ஸ்ரீசுப்பிரமணிய சுவாமி

## பிரதிட்டை யட்டபந்தனப்

## பதிகப் பிரபந்தம்.

இஃது

திருநெல்வேலி

சுவாமி நெல்லையப்பர் ஸ்ரீகாந்திமதியம்மாள் கோவிற்

றுனிக வித்வ பரம்பரையில் ஜேஷ்டரான மஹா வித்வான்

**அம்பலவாணன் கவிராஜரவர்கள்**

ஜேஷ்ட குமாரர்

**கவிராஜ**

**முத்துக்குமாரசுவாமியாபிள்ளை**

இயற்றியது.

நூருல் இஸ்லாம் பிரஸ்,
திருநெல்வேலி.
1909

திருச்செந்தூர்

# ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமி

## பிரதிட்டை யட்டபந்தனப் பதிகப் பிரபந்தம்



### விநாயகர்துதி

வேண்டியவெல்லா மளிக்கு மேன்மைவளர் செந்திநகர்
ஆண்டவன்மேற் பாடுவதற் கன்பர்களாற்—காண்டலுறுந்
தூண்டி விநாயகனுந் தூயனவா நல்வாக்கை
யீண்டடியேற் கீவா னியைந்து

### நூல்

ஞாலமதைக் காக்குமரி போற்று நெல்லை
நாதர்பயந் தினிதருளு நலமார் செந்தில்
வேலவராங் கலியுகமா வரத வேட்கு
விளம்பாண்டா யிரத்தெண்பான் மேவு நான்கின்
கிலகமா வருடந்தை யிருபா னேழிற்
கிளர்மதிநா ளுத்திரம்லக் கினமு மானிற்
கோலவட்ட பந்தனம்பி ரதிட்டை யாற்றற்
கும்பிடுவோர் மும்மலத்தின் கோதற் றாரே (க)

முந்தறுமா கருடனிடம் பாய நெல்லை
முதற்றணந்தாழ் வார்நகரில் முகுந்த னூர்க்குச்
சொந்தமரு மானுயுற் றகன்றங் கப்பாற்
றொன்மைச்செந் தினிலுறுஞ்சேய் துலங்கு மாந்தர்
பந்தமற யிக்கலியிற் பயனிங் கெய்தப்
பகருமெழி லூதனமாம் படிவங் கொண்டான்
அந்தவேட் குறுமணியார் பதிட்டை தன்னே
டட்டபந் தனம்பார்ப்போ ரமரா ராமே. (௨)

நன்றுதிகழ் கவுணியர்கோன் மணத்தைக் கண்டு
நல்வினைதீ வினைப்பயனை நசிக்க வெண்ணி
யன்றுபெரு மணநல்லூர்ப் பதியி லேய்ந்தோர்
அத்தனைபேர் மெய்ஞ்ஞான வீடு சேர்ந்தார்
இன்றுலகோ ரப்பயனை யடையத் தானும்
எழிலுறுசே யாய்ச்செந்தூ ரினிது மேவி
நின்றிடலா லவ்வேளின் பதிட்டை காண்போர்
நின்மலஞா னம்பெறுத னியமந் தானே. (௩)

முன்னாட்டோ ழமையாய்வன் றொண்டற் கான
முடிச்சேர மான் பெருமாள் முதன்மைத் தாக
மன்னாட்டுங் கேரளமா தேயஞ் செய்த
மாதவத்தின் வலியாலே வந்து தித்தோன் .

என்னாட்டி னுறுபொரு மிறைஞ்சி யேத்தும்
இயல்புடையான் மகிமைவள ரிசையு ளானத்
தென்னாட்டுந் தந்திரியாற் செந்திற் சேய்க்குச்
செயும்பிரதிட் டையினழகைச் செப்பற் பாற்றோ. (௪)

செப்பிடுமந் நகருற்றே விதியின் மார்க்கந்
தெளிந்தருண காட்வாசு தேவன் யாரும்
ஒப்பருமை நம்பூரி யுலகின் மேலாம்
உத்தமனும் வல்லோனு முயர்வா மன்பின்
மெய்ப்பாகப் புரிகிரியைக் கிசையப் பாணி
விளங்கவெழிற் பதிட்டையினை மேன்மைச் செந்தூர்ச்
சுப்பிரம ணியப்பெருமாற் கமைத்த பேற்றைச்
சொலவல்லார் யார்புவியிற் சுருதி போரே. (௫)

தண்டுழாய் மௌலியயன் மகவான் மற்றுந்
தக்கசுரர் பதிட்டையினிற் றாழ்ந்து போற்றி
யண்டிடற்கந் நம்பூரி யன்பி னேற்றும்
அரியதொரு முச்சுடரி லாருஞ் சோதி
பண்டுளவாஞ் செந்தினகர்க் குகற்கு மூன்று
பகற்கழிந்தும் பழையவொளி பரப்பி மெய்மைத்
தொண்டர்முத லனைவோரு மடைந்த மாண்பைச்
சொலமுடியா தீதுண்மைத் தொன்மை யோரே. (௬)

இருக்குமுத னான்மறைவே தியர்க ளோத
யிமையவர்க ளறுமலர்தூ யிறைஞ்சிப் போற்ற
மருக்குலவுந் திருச்செந்தூர் முருகன் றாவி
மானகும்ப மபிடேக மருவுங் காலை
அருக்காருஞ் செங்கருட னங்கு சேர்ந்தே
அஞ்சலிசெய் திடலாலே யவனி யோரப்
பெருக்கினட்ட பந்தனத்தா லுற்ற வாழ்வைப்
பேசவெனி லெவராலும் பேசொண் ணாதே. (எ)

நறுமலர்க்கா நாகநடுச் சூழுஞ் செந்தில்
நாதனது பதிட்டையொடு நவிலவ் வேட்கும்
அறுமுகமாப் பெருமாற்கும் வள்ளி தெய்வ
யானையனை வருக்குங்கும் பாபி டேகந்
தொறுவுடனே முனிவோரு மேனை யோருந்
தொழுநடந்த மப்பெருமான் றேர னஞ்சேர்
மறுகினிடைப் பவனிவா னவர்ம லர்த்தூஉய்
வணங்கிடவும் வரக்கண்டு மகிழ்ந்துய்ந் தோமே. (அ)

செந்திநகர் வேலவனைத் தேர்ந்திங் கன்பின்
றினம்பணிந்து வாழ்த்துபவர் திகழா நின்ற
இந்திரலோ கப்பதவி யடைந்தங் கப்பால்
எழிலுறுமே னைப்பதங் ளெல்லாந் தாமே

சொந்தமா யுற்றிடுவர் மெய்ஞ்ஞா னத்தின்
சுகவாரி தனிலாழ்ந்து தோன்று நிற்பர்
புந்திவெளி தாயுறும்யான் புகலிவ் வாக்கைப்
போற்றுபவர் மெய்ஞ்ஞானம் பொருந்து வாரே. (௬)

செந்தில் வளர் செவ்வேளின் பதிட்டை யோடு
சிறப்பினட்ட பந்தனமுஞ் செய்வா னெண்ணி
முந்துறுமாந் தானத்தார் தலத்தா ரோடு
முயன்றவரும் பொருளளித்த முதன்மை யோரும்
வந்துதவி யிவண்புரிந்தோர் வணங்கி னோரும்
வாழ்கயிந்த நகரும் வானுலகின் மேலாய்
எந்தவள மோங்கியுமே யினிது வாழ்க
எவ்வுலகு மவனருளால் வாழ்க மாதோ. (௭)

முற்றும்

# ஷை பிரதிட்டை யட்டபந்தன நடத்திய முக்கியர்களைப்பற்றிப்பாடியது.

## 2 செய்யுளும் ஒருதொடர்.

நெல்லையம் பதிவாழ் சிவமதக் கமிட்டி
நியமக மெய்யர்க ளொருங்காய்,
ஒல்லையிற் சேர்ந்தே முருகவே டனக்கிங்
குறும்பிர திட்டைய துடனவ்,
வெல்லையி லட்ட பந்தன மியற்ற
யிபன்றவா செய்துமே யவரிற்,
றொல்லைமா மறையோர் குலகுரு சாமித்,
தோன்றலும் விதிமுறை தொடுத்து (1)

அரும்வலம் புரிக ளிலையிறுற் கனைசேர்ந்
தமைவுறு செயந்திகா த்தருளு,
முருகனுக் கட்ட பந்தனச் சிறப்பு
முதற்பிர திட்டையு முடித்தார்,
தருமகர்த் தாக்க ணெல்லையில் முதன்மைச்,
சாவடித் திருமலைக் கொழுந்தும்,
மருமணச் செவலின் வேத மூர்த்தியுமாம்,
வள்ளலார் தம்மொடு சேர்ந்தே (2)



உ



# பழனியாண்டவர் பதிகம்.

## காப்பு.

தென்பழனி யாண்டவன்மேற் செய்யபதி கஞ்செப்ப
இன்பவளர் தந்திங் கினிதுதவும்—நன்பவளச்
செஞ்சடையா னீன்றருளுந் தெய்வத் திருக்கரங்கள்
அஞ்சுடை யான் கஞ்ச வடி.

## நூல்.

1. சீர்பொலிந் திலங்கு மதிமுகத் தழகுந்
திருவரு ணிறைந்தகண் ணழகுந்
திகழ்நல லடியார் செய்துதிப் பாடல
கேட்டுறுஞ் செஞ்செவி யழகும்
ஏர்பொலிந் திலங்கும் வேலேந்து குமா
ரிடர்க்கண்டோர்க் கருள்கரத் தழகும

இன்மொழித் தெய்வப் பிடிகுற மாது
ளின்புற முறுவல்செய் யழகுந்
தார்பொலிந் திலங்கு மார்பகத் தழகுந்
தகவுடன் குறங்குசேர்த் தொருகை
தண்டெடுத் தொருகை யன்பருள் ளத்திற்
சார்ந்திடுங் காட்சியி னழகும்
பார்பொலிந் திலங்கப் பசுமயி லேறிப்
பாவியேன் காணவந் தருளாய்
பழவினை யகற்றும் பதயுகா நனைசேர்
சுனையமர் பழனியாண் டவனே.

இடுக்கண் - துன்பம். குறங்கு - தொடை. பதயுகா - இரண்டு பாதங்களையுடையவனே. நனை -அரும்பு.

2. தூமல ரெடுத்தன் புடனருச் சித்துத்
தொழுதகு பாதமேத் தறியேன்
தொண்டுசெய் நினது தொண்டருக் கென்றுந்
தொண்டுசெய் தொழுகுமா றறியேன்
காமலி கற்ப நாட்டிறை கவலை
கழித்தருள் செய்யுநின் கதையைக்
களிப்புட னடியா ருரைத்திட வுள்ளங்
கனிவொடு கேட்குமா றறியேன்
நாமலி நினது நற்றிரு நாம

நவின்றொரு நாளுமிங் கறியேன்
நாயினுங் கடையேன் செய்பிழை பொறுத்து
நாவலர் நவநவ மாகப்
பாமலி தெரியல் சூட்டிட நடனப்
பசுமயி லேறிவந் தருளாய்
பழவினை யகற்றும் பதயுகா நனைசேர்
சுனையமர் பழனியாண் டவனே.

3. எண்ணிலாக் கால மிழிபிறப் பெய்தி
யிளைத்திளைத் தவையொழித் தறிவார்
இந்தமா னிடத்தின் முந்தைமா தவத்தா
லினிதுதித் திடவருள் பெற்றும்
மண்ணிலாம் வாழ்வை மெய்யென நினைந்து
மாதர்பாற் றோன்றிடுங் காம
மதுவினை யுண்டு மயங்கியே திரியும்
வஞ்சனேற் குளமிக விரங்கித்
தெண்ணிலா மதிசேர் செஞ்சடைப் பெருமான்
றிருவுளங் களித்திட நடிக்குஞ்
செய்யபொற் றாளா வருட்சிவ காமி
செல்வமே தெய்வகந் திருவர்
பண்ணிலா மிசையாழ் பயின்றுதோத் திரிக்கப்

பசுமயி லேறிவந் தருளாய்
பழவினை யகற்றும் பதயுகா நனைசேர்
சுனையமர் பழனியாண் டவனே.

4. சுந்தர வடிவேற் கந்தவே ளெந்தாய்
சுரர்மனக் கவலைதீர்த் தருளிச்
சுரபதி சசியோ டரியணை யிருக்கச்
சுரந்தருள் செய்யுமா ரமுதே
சந்தத நினது திருவடிக் கமலந
தம்முளத் தடக்கினி லலரச
சகசநிட் டையினி லானந்த வாரி
சாருவார் நினதுமெய்த் தொண்டா
இந்தவெங் கொடிய விருணிறை பிறவிக்
கடல்படிந் தெழும்வகை யின்றி
யின்னது செய்வ தின்னது தவிர்வ
தெனவறி யாதுழல் வேன்றன்
பந்தம தறுத்துப் பசுமயி லேறிப்
பாவியேன் காணவந் தருளாய்
பழவினை யகற்றும் பதயுகா நனைசேர்
சுனையமர் பழனியாண் டவனே.

சசி - இந்திராணி.

விண்ணிடைத் தோன்றி மின்னென நிலையா
மெய்யினை மெய்யெனக் கருதி
வேல்விழி மாதர் விழிவழி யொழுகி
வேனில்வேள் கணைக்கிலக் காகி
மண்ணிடை யலைந்து மயங்கிய தல்லால்
வானவர் பரவுநின் றுட
மகிழ்ந்தொரு நாளு முச்சரித் தறியா
வறியனேற் குளமிக விரங்கிப்
பெண்ணொரு பாகத் தண்ணலார் கண்ணிற்
பெருமையோ டுதித்திடுங் குமரா
பொருவரை யுருவ வயில்விடுத் தமரர்
பெருங்கிளை புரந்தருண் மூர்த்தி
பண்ணவர் பரவிச் சயசய வென்னப்
பசுமயி லேறிவந் தருளாய்
பழவினை யகற்றும் பதயுகா நனைசேர்
சுனையமர் பழனியாண் டவனே.

வரை - மலை. அயில் - வேல். பண்ணவர் - தேவர்.

அருவமா யுருவா யருவுரு வாகி
யரிபிர மாதிகட் கெட்டா
அநாதியாய்ப் பலவா யொன்றதாய் நின்ற

அருட்பெருஞ் சோதியோர் வடிவாய்க்
கருணைகூர் கமல முகங்களோ ராறுங்
கற்பகக் கைகள்பன் னிரண்டுங்
காசினி முழுது முய்ந்திடக் கொண்ட
கந்தவே ளெந்தைநீ யன்றோ
கருவினி லுருவாய் வளர்ந்திவண் வந்து
கவலையாங் கடலிடை மூழ்கிக்
கரையொரு நாளுங் காணுத லின்றிக்
கலங்கியே யுழலுவேன் காணப்
பரிவுட னஞ்ச லஞ்சலென் றருளிப்
பசுமயி லேறிவந் தருளாய்
பழவினை யகற்றும் பதயுகா னனைசேர்
சுனையமர் பழனியாண் டவனே.

7. மலர்மக ளுறையு மார்பனு மலர்மேல்
வானவன் றனுமிந் திரனும்
வயங்கெழு திக்குப் பாலரு மற்றை
வானவர் யாவருந் தங்கள்
தலைமிசைக் கமல மலர்க்கரங் குவிக்கச்
சந்தமார் கந்தவெற் பதனிற்
சராசர மனைத்துந் தனையன்றி வேறொன்

றிலையெனுந் தன்னுருக் காட்டும்
நலமலி வடிவேற் கந்தனீ யன்றே
நாயினேற் குளமிக விரங்கி
நானில முவப்ப விருள்பறந் தொளிக்க
நல்லிளங் கதிரொடுங் கடலிற்
புலர்புகழ் பானு வுதிக்குமா போலப்
பசுமயி லேறிவந் தருளாய்
பழவினை யகற்றும் பதாபுகா நனைசேர்
சுனையமர் பழனியாண் டவனே.
வயம் கெழு - வெற்றிபொருந்திய.

பொன்னுல கமரார் தமைச்சிறைப் படுத்திப்
புன்றொழி லேபுரி கின்ற
புல்லனுஞ் சூரன் றனையடர்த் திட்டுப்
போற்றிடு மடியவர்க் கருளுந்
தன்னிக ரில்லாத் தனிப்பெருஞ் சுடரே
தாவியே படருதற் கமைந்த
தனிக்கொழு கொம்பில் கொடியென வடியேன்
றனிமனம் பதைத்திடா வண்ணம்
பொன்னவிர் கமல பீடம துறையும்
புனிதனன் றுணர்ந்திடாப் பொருளைப்

பூதா மகளா ராதாம் பெருகப்
புளிபெலா முய்ந்திட வுவந்து
பன்னகா பரணர்க் கருள்சிவ குருவே
பசுமயி லேறிவந் தருளாய்
பழவினையகற்றும் பதயுகா நனைசேர்
சுனையமர் பழனியாண் டவனே.

பூதரமகளார் - பார்வதி.

9. பெருகொளி வடிவேற் கந்தனே தெய்வப்
பிடிகுற மாதுளங் களிக்கும்
பெருவரை யார மார்பனே யடியார்
பிழைபொறுத் தருள்செயுந் தேவே
பருவாற் கிடமா மாதர்சிற் றின்பப்
படுகுழி வீழ்ந்தயர்ந் தழன்று
பாவமே புரிந்து பழியினைச் சுமக்கும்
படிறனேன் மனத்தினை யருளாற்
றிருகிநின் கமலச் சேவடி யூறுந்
சிவாநந்த சாகர மதனிற்
சிறப்பொடு மடக்கி யானென தென்னுஞ்
செருக்கினை யறுத்தருட் டேனைப்
பருகுவித் திடநீ மாகத நடனப்
பசுமயி லேறிவந் தருளாய்.

பழவினை யகற்றும் பதயுகா நனைசேர்
சுனையமர் பழனியாண் டவனே.

படிறன் - வஞ்சகன். திருபி - திருப்பி.

10. கார்முக மேரு கணைதிரு மருமக்
கார்முகில் கட்செவி நாணுக்
கரத்தினிற் கொண்டு திரிபுர மெரித்த
கண்ணுத லீன்றருள் குமரா
தார்மலி நீப மார்பனே யருள்சேர்
தந்திமா முகவனுக் கிளையாய்
தமியனே னுள்ளத் துயரெலா மொழியத்
தண்ணருள் செய்யுமா ரமுதே
சூர்முத லசுர ருளம்பதை பதைக்கச்
சுரர்மன மிகக்குதூ கலிக்கச்
சுடரிலை நெடுவேற் றிருக்கரத் தெடுத்த
சோதியே யாதிநா யகனே
பார்முழு வதுமோர் நொடியினில் வலஞ்செய்
பசுமயி லேறிவந் தருளாய்
பழவினை யகற்றும் பதயுகா நனைசேர்
சுனையமர் பழனியாண் டவனே.

காமுகம் - வில். திருமருமக்கார்முகில் - விஷ்ணு.
கடசெவி - பாம்பு. நீபம் - கடப்பமாலை.

---

உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

திருப்பாதிரிப்புலியூருக்கடுத்த

கரையேறவிட்டநகர்க்

# கற்பகவிநாயகக்கடவுள் பதிகம்.

# திருநாவுக்கரசுசுவாமிகள் பதிகம்.

# அநுபவவிண்ணப்பமாலை.

---

இவை,

ஷை நகரவாசி

துக்கோட்டை தேவராயபிள்ளையவர்கள் குமாரரும்

திருப்பாதிரிப்புலியூர் இயற்றமிழாசிரியர்

சிவசிதம்பர முதலியாரவர்கள் மாணாக்கரும்

...வேலி ஜில்லா உதவி மேஜிஸ்டிரேட் [illegible]ராகிய

வேங்கடராமபிள்ளையவர்களால்

இயற்றப்பட்டு,

சுப்பிரமணியபிள்ளையவர்கள் குமாரரும்

ஷை கற்பகவிநாயகர் திருநாவுக்கரசு சுவாமிகள்

தருமகைங்கரியருமாகிய.

சு. சொக்கலிங்கம்பிள்ளையால்

---

சென்னை:

கலாரத்நாகர அச்சுயந்திரசாலையில்

பதிப்பிக்கப்பட்டன.

---

சோபகிருது௵ ஐப்பசி மீ.

உ

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

சிதம்பரம் - ஈசானியமடம்

## ஸ்ரீமத் - இராமலிங்க சுவாமிகள்

திருவாய்மலர்ந்தருளியது.

---

### அறுசீரடியாசிரியவிருத்தம்.

வாக்கரசைக் கரையேற்று நிபத்தினிலப் பெயர்கொணகர் வதிந்து வேட்டோர்க் காக்கமெலா மளித்தருள்கற் பகவி... குமவ் வாக்கரசருக்கு, நோக்கமெரால் வொருபதிக நுவன்றுமற்றை யவர்க்குமன்பி ஞேன்மை தேற்று, மூக்கமிகு வேங்கடசா மிக்குரிசில் சீர்த்தியின்மிக் கோங்க மாதோ.

---

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

திருப்பாதிரிப்புலியூருக்கடுத்த

# கரையேறவிட்டநகர்க்

# கற்பகவிநாயகக்கடவுள் பதிகம்.

---

## காப்பு.

### நேரிசை வெண்பா.

கற்பகப்பூஞ் சோலைக் கரையேற விட்டநகர்க்
கற்பகவி நாயகனைக் கைதொழுதே - சொற்பதிக
மன்னவன்றாள் சாத்த வணியுறுநற் செங்கமல
மன்னவவன் றாளே யரண்.

---

## நூல்.

### பன்னிருசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

சீர்கொண்ட வாரணம் போற்றுமத வாரணத்
திருமுகமு மணிமார்பமுந்
தேவர்க டிக்கைநித மேபெறு துதிக்கையுந்
திண்படைகொ ணான்குகரமு
மேர்கொண்ட வடியவர்க் கிடர்கடி நுதற்கணு
மிணையிலிணை நுதல்கண்களு
மெண்டிசையி லுள்ளவரு மெண்டிருத் தாண்மலரு
மெந்நாளு மேத்தவருள்வாய்

நார்கொண்ட நிலவனிதை திருமுகமெ னத்திகழு
நடுநாட்டி லன்னுறுத
னலமலி திருப்பா திரிப்புலி நகர்ப்பக்க
னன்னுதற் றிலகமன்ன
கார்கொண்ட முகில்கலவு மணிமாட கோபுரக்
கரையேற விட்டநகர்வாழ்
கற்பனை யமைந்தகவி விற்பனர் புகழ்ந்திலகு
கற்பகத் தந்திமுகனே. (க)

அண்டருமை விண்டுபுரு சண்டிசசி யங்கா
ரகன்சேடன் வீமன்நளன்
அஞ்சம்பு பெற்றகுக னஞ்சம்பு பெற்றவ
னகத்தியன் முதலாயினோர்
பண்டறுகு கொண்டுனது புண்டரிக நற்றாள்
பணிந்தவர்கள் பெற்றபேறு
பலநா வமைந்தவப் பணிவர னலாலெனாற்
பகரவும் மெளிதாகுமோ
தொண்டைமண் டலநிலவு துளுவவே ளாளர்குல
தூயவன் றக்காரெனச்
சொற்றதிரு வள்ளுவர் குறட்குறு மிலக்கியச்
சுகுணனுஞ் சொக்கலிங்கன்
கண்டுகண் டற்புதத் திற்பணிகள் செய்யநிகழ்
கரையேற விட்டநகர்வாழ்
கற்பனை யமைந்தகவி விற்பனர் புகழ்ந்திலகு
கற்பகத் தந்திமுகனே. (உ)

வையமது நிகரலாக் கபிலர்சிந் தாமணியை
வாஞ்சையா லபகரித்த
வஞ்சகத் தன்மையுள கணனெனனு மபிதான
மன்னவனை வென்றுமணியைச்

# கற்பகவிநாயகக்கடவுள்பதிகம்.



செய்யவம் முனிகையி லீந்தருள் கணேசனே
நீநிரய மொன்றுமலே
சீராய நின்சரித பாராய ணஞ்செயச்
சிறியேற்கு வரநல்குவாய்
துய்யமது வுண்டிமிரு மொய்யளியி னொலிகளுந்
தூயவர்கள் வேதவொலியுஞ்
சுந்தரத் தெற்றியிற் பந்துகழ லாடிடுந்
துப்பிதழ்ப் பொற்புமடவார்
கையிலணி வளையொலியு மையெனமு ழங்கிடுங்
கரையேற விட்டநகர்வாழ்
கற்பனை யமைந்தகவி விற்பனர் புகழ்ந்திலகு
கற்பகத் தந்திமுகனே. (ங)

செங்கதிர் விளங்குமணி மௌலியொடு கங்கணஞ்
சீர்மணி யழுத்தங்கதந்
திகழுநவ ரத்தினக் குண்டலங் கண்டிகை
சிறந்தமுந் நூல்சிலம்பு
பிங்கலந லாடைக ளியங்கலிற் கோடிரவி
பெட்குமொள் ளொளிவீசுநற்
பிரணவ சொரூபவென் னிதயவிரு ணீக்கியே
பேரின்ப வாழ்க்கையருள்வாய்
தெங்குசூ தங்கதலி பைங்கமுகு சிந்தூரந்
தீம்பலாக் கோங்குவேங்கை
தேக்கரசு நாவல்சந் தனம்வாகை செண்பகந்
தித்திக்கு முத்திக்கெலாங்
கங்கைபுரை கெடிலநதி நீராற் செழித்துவளர்
கரையேற விட்டநகர்வாழ்
கற்பனை யமைந்தகவி விற்பனர் புகழ்ந்திலகு
கற்பகத் தந்திமுகனே. (ச)

## கற்பகவிநாயகக்கடவுள்பதிகம்.

அண்டர்புகழ் புத்தேளி ரனைவர்க்கு மாதார
மாகிமிளிர் நின்னைவியவா
தனுவெனினு மீயாத பாவியாம் லோபியை
யருங்கொடைக் கன்னனென்றே
கண்டிராத மானகவி சொல்லியே யிலவினைக்
காத்திடுங் கிள்ளைபோலக்
காசினியி லோர்பயனு மில்லாம லலைகின்ற
கவிகண்மதி யேழைமையென்னே
விண்டடவு சிகரமணி மாடமதி லேறியே
மின்னனைய கன்னன்மொழியார்
மேன்மைபெறு காண்மலர்கள் பூங்குழலி லார்த்திடும்
விண்ணுலக மடவார்களைக்
கண்டுளை மகிழ்ந்தளவ ளாவிவிளை யாடிடுங்
கரையேற விட்டநகர்வாழ்
கற்பனை யமைந்தகவி விற்பனர் புகழ்ந்திலகு
கற்பகத் தந்திமுகனே. (௧)

ஒன்றுளவ மாலயன் கொன்றையணி ருத்திரன்
னெனுமூவ ரைப்படைத்தே
யிசைஞான மீந்தும் பரப்பிரம மின்னதென்
றெளிதிலுண ராதுழன்றே
சென்றுதவ மேபுரிய வக்ரதுண் டேசனுந்
தெரிசனந் தந்தவருளந்
தெளிவுறச் செய்தநிற் கல்லான் முதன்மைமறு
தெய்வங் களுக்கேற்குமோ
மன்றலங் குவளைதிகழ் தண்பணைக ளிற்பனைகள்
வாய்ந்தமலை தோய்ந்துபெருகு
மாமதுர மாநறவு மண்ணுமுக் கனிவிண்டு
வழிதேனு மேய்மேதிகள்

கன்றினை நினைந்துசொரி பாலோடு பாயுநற்
கரையேற விட்டநகர்வாழ்
கற்பனை யமைந்தகவி விற்பனர் புகழ்ந்திலகு
கற்பகத் தந்திமுகனே. (௬)

சுருதிகள் வரைந்தபுத் தகமதனை மறைவுசெய்
துட்டனுங் கமலனென்னுஞ்
சூரருட் கொடியவல் லவுணனைக் கொல்லவே
தூயமக மொன்றியற்றி
யெரிதிகழு மோமகுண் டத்தினி லுதித்திடு
மெழின்மயிலி லென்னையாண்ட
விறைமுருக னிகரவே யேறிவென் றிட்டவா
வெளியனைக் காத்தலரிதோ
வரியகலி யையா யிரத்துமூன் றும்பிலவ
வாண்டுதேன் மதிதிகதியே
மூர்ந்தசுக் கிரவார முத்தரட் டாதிமீ
னமைதிதியே காதசிதனுக்
கருதுலக் கினமதிற் கும்பாபி டேகங்கொள்
கரையேற விட்டநகர்வாழ்
கற்பனை யமைந்தகவி விற்பனர் புகழ்ந்திலகு
கற்பகத் தந்திமுகனே. (௭)

ஒப்பிலொரு வெண்கோ டிரண்டுசெவி மூன்றுமத
மொழுகுநால் வாய்வதனமோ
டோங்குமெழி லைங்கரம் பேருதர மார்ந்தவா
வுட்பகைக ளாறொழித்தே
யிப்புவியி லொளிர்காசி யுற்றநின் மூர்த்தங்க
ளெண்ணேழு நன்குணர்ந்தே
யினிதுபா சிக்கினை யவ்வுபா சனைபலனு
மீபவனு நீயொருவனே

## கற்பகவிநாயகக்கடவுள்பதிகம்.

*

மைப்பரவை நீர்முழுது மாசமன மேசெய்த
மகிமைமிகு தமிழின்முனிவன்
மன்னிப் பிறங்குமலை நின்றுவரு தென்றலணி
வாய்ந்தநந் தனமேவியே
கப்புமலர் வாசனையை யெப்புறமும் வீசுநற்
கரையேற விட்டநகர்வாழ்
கற்பனை யமைந்தகவி விற்பனர் புகழ்ந்திலகு
கற்பகத் தந்திமுகனே. (அ)

மாசறுகு ணத்தினன் மரீசிமுனி வன்றந்த
வல்லபையை வதுவைசெய்து
மாகமலை தந்தவெழின் மோதைபிர மோதைமுதன்
மங்கையர்கள் பன்னிருவரை
யாசையொடு கேசவனு நல்கிட மணந்தவற்
கருஞான தத்துவத்தை
யருளியன் ஞன்மகிழ விசுவரு பங்காட்டு
மருள்வள்ள னீயல்லையோ
வாசமல ரைந்தரு நிழற்றுமம ராவதியில்
வைகுநற் றெய்வவானோர்
மாதுறவை நீக்கியே மாதுறவை யேகொள்ளு
மகிமைகுன் றாததவருங்
காசினியி லில்லறத் தவர்களுங் கைதொழூஉங்
கரையேற விட்டநகர்வாழ்
கற்பனை யமைந்தகவி விற்பனர் புகழ்ந்திலகு
கற்பகத் தந்திமுகனே. (கூ)

சந்ததங் குகனடிகள் வந்தனைசெய் வேங்கடச்
சாமியாந் தாசனுள்ளந்
தங்குங் கணேசனே யடியவர்க ணேசனே
தகையுமைக் கதிபாசனே

யிந்தநில மீதிலே சிந்தைக் கிலேசமு
மியாக்கையிற் றுக்குபிணியு
மெள்ளளவும் வாராமல் வேண்டிய வரங்கணீ
யெளியனேற் கருள்செய்கண்டாய்

சிந்துவினி னுந்தறல ருந்தியெழு கந்தரஞ்
சேர்ந்துதவழ் பூஞ்சோலையுட்
சின்னவிடை யன்னநடை சொன்னவுடை மின்னனைய
தெரிவையர்கள் கொழுநர்களொடுங்

கந்தமலர் கொய்துள மகிழ்ந்துவிளை யாடுசீர்க்
கரையேற விட்டநகர்வாழ்
கற்பனை யமைந்தகவி விற்பனர் புகழ்ந்திலகு
கற்பகத் தந்திமுகனே. (௧௦)

முற்றிற்று.



---

கற்பகவிநாயகக்கடவுள் திருவடிவாழ்க.



---

இப்பதிகத்தமைந்துள்ளசரித்திரங்கள் பெரும்பாலும் விநாயகபு
ராணமென்னும் பார்க்கவபுராணத்தமைந்துள்ளனவே.

உ

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

# கரையேறவிட்டநகர்த்

# திருநாவுக்கரசுசுவாமிகள்பதிகம்.

## காப்பு.

### நேரிசைவெண்பா.

கற்றவாகண் மெச்சுங் கரையேற விட்டநக
ருற்ற வருட்டிருநா வுக்கரையாக்—கற்றமிகு
மற்ப மதியே னறைபதிக முற்றவவ்லூர்க்
கற்பகவி நாயகன்றுள் காப்பு.

## நூல்.

### எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திருவளரு முனைப்பாடி நாட்டின் மிக்க
திருவாமூர் வேளாளர் குலப்பால் வேலை
வருமணிபோற் புகழனூர் புதல்வ ராகி
மருணீக்கி யாரெனவே வந்தார் தம்மைத்
தெருளாள னருளாளன் சொக்க லிங்கன்
செய்ததிகழ் மணிப்புரிசைக் கோபு ரத்திற்
கருமுகில்க ளொருங்கிமிகத் தவழ்ந்து லாவுங்
கரையேற விட்டநகர்க் கண்டே னானே. (க)

# திருநாவுக்கரசுசுவாமிகள்பதிகம்.

அரியவருட் கலைதழைப்பத் தவமிக் கோங்க
வஞ்ஞான திமிரமற வலரி போலத்
திருவதிகைப் பரனருளாற் சைவ மல்கத்
திலகவதி யாருடனே யுதித்தார் தம்மைப்
பெரியவர்க ளிதயமெனத் தெளிந்து நீத்தம்
பெருகிவரு கெடிலநதித் திரைகண் மின்னுங்
கருமணலோ டொளிமணிகள் கொழிக்குஞ் செல்வக்
கரையேற விட்டநகர்க் கண்டே னே. (௨)

வெஞ்சமணர் மதத்துறுங்கா லவர்க ளாலே
விலக்கவொணாச் சூலையுற வருந்தி யோர்ந்தே
தஞ்சமெனச் சோதரிசொற் படிய ரற்குச்
சாத்துபதி கத்தினந்நோய் தவிர்ந்துய்ந் தாரை
யஞ்சிறைய வோதிமங்கள் கண்ப டுக்கு
மலர்ப்பழனத் துழவர்மடை மிதிக்கச் செந்தேன்
கஞ்சமலர் நின்றுகனி பெருகுஞ் சீர்சால்
கரையேற விட்டநகர்க் கண்டே னே. (௩)

கொல்லவெனும் பல்லவரா யன்றீ நீற்றுக்
கொடுவறையி லடைத்திடவு மகிழ்ச்சி யெய்தி
யெல்லையிலாப் புகழரன்மேன் மாசில் வீணை
யென்றுதிருக் குறுந்தொகைப்பாட் டிசைத்தார் தம்மை
நல்லமணம் வீசுமெழின் மலரிற் றோய்ந்த
நறவதனை வெறியுறவே பருகி யெங்குங்
கல்லெனவே யளிமுரலு நளிர்பூஞ் சோலைக்
கரையேற விட்டநகர்க் கண்டே னே. (௪)

சற்றுமிரங் காச்சமணர் கல்லிற் கட்டிச்
சாகரத்திற் றள்ளிடக்கற் றெப்ப மாகச்
சொற்றுணைவே தியனெனவே பதிகம் பாடித்
தூயபஞ்சாக் கரத்துணையாக் கரைசேர்ந் தாரைப்

பற்றுபர தத்துவத்தின் பொருளை யோர்ந்து
பாரினர்க்குப் பரமார்த்தம் பகர வல்ல
கற்றவர்கண் முற்றமெலாங் கலையாள் வைகுங்
கரையேற விட்டநகர்க் கண்டே னானே. (ரு)

பரிதியொளி யன்மதியன் மறைச்செவ் வாயன்
பாம்புதனைப் பணியாக்கொள் குருநா தன்மேற்
சுருதிநயக் கவிபொழிந்து சமணர் கூட்டச்
சூட்டரவுக் கசனியெனத் தோன்றி னானை
விரிமலரி னறுந்துகளை வீதி தோறும்
வீசுமிளந் தென்றனிதஞ் சிதறத் தேனைக்
கரியவளி பெரிதும்வழக் குறவே சிந்துங்
கரையேற விட்டநகர்க் கண்டே னானே. (சு)

அன்றெரிலை கொணரச்சென் றரவான் மாண்ட
வப்பூதி யடிகளின்சீர் மைந்த னுக்கு
வொன்றுகொலா மவர்சிந்தை யென்றே யோதி
யுயிரளித்தன் னார்விருந்துக் குகந்தார் தம்மை
யன்றிலொடு மயில்குயில்கொக் கன்னம் பூவை
யவந்திகையர்க் கம்புறவு சக்ர வாகங்
கன்றுதொட ரானினமான் கயங்கள் சூழுங்
கரையேற விட்டநகர்க் கண்டே னானே. (எ)

இடைக்கிடைநன் மாரிபொழி மறைக்காட் டின்க
ணிரக்கமொன்றி லீரெனவே பதிக மோதி
யடைத்ததிருக் கதவங்க டிறக்கச் செய்த
வப்பரைநல் லுழவாரப் பணிகொண் டாரைத்
தொடற்கரிய தழலிரவி மதியின் மிக்க
சுடர்விளங்கு நவமணிகண் மலைகள் போலக்
கடைத்தெருவில் வணிகரெலாங் குவித்து விற்குங்
கரையேற விட்டநகர்க் கண்டே னானே. (அ)

இரும்புவனத் தறுமடியர்க் கெண்ணியகல் வரங்க
ளீயமனை மூவந்துவெள்ளி வரைவா ழீசற்
கரும்பொனினம் பலமெனத்தந் திருவுள் ளத்தை
யமைத்திலகு செம்புனித வப்பர் தம்மைச்
சுரும்பணுக மதம்பொழியு நால்வா யீட்டஞ்
சோலைகளிற் கன்னல்களைத் துய்க்குங் காலக்
கரும்பொழுகு சாறுறலாற் செந்நெ லோங்குங்
கரையேற விட்டநகர்க் கண்டே னே. (க)

சித்திரையிற் சதயமதிற் சைவ மோங்கச்
சிவப்பேறு பெற்றவெம தப்பர் தம்மைப்
பத்தன்வேங் கடசாமி பணிந்தே யுய்யப்
பத்திநெறி யிலக்கணங்கள் பகர்ந்த கோவை
வித்தகரைத் தாண்டகங்க ளருளி னூரை
வெம்பிறவி கடத்திமுத்திக் கரையி லேற்றுங்
கத்தனெனுங் கற்பகவி நாய கன்வாழ்
கரையேற விட்டநகர்க் கண்டே னே. (க0)

முற்றிற்று.

---

திருநாவுக்கரசுசுவாமிகள் திருவடிவாழ்க.

---

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

# கரையேறவிட்டநகர்க் கற்பகவிநாயகக்கடவுளாலயத்தமரும் பழனியாண்டவர்துதியாகிய அநுபவவிண்ணப்பமாலை.

காப்பு.

நேரிசைவெண்பா.

கங்கைமுடி யோன்வாழ் கரையேற விட்டநகர்ச்
செங்கையைந்து ளான்கோயிற் சீர்த்தம்பர்—தங்கிவளர்
நற்பழனி யாண்டவனை நாடியருள் வேண்டவந்த
கற்பகவி நாயகன்றாள் காப்பு.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

சீரோங்கு நமோநா டணைந்தொளிர் திருப்பா திரிப்புலி நகர்ப்பாங் கரி, னீரோங்கு செந்நெல்விளை கழனிபுடை சூழ்மாட நிகரிலா வண் டுநகரிற், பாரோங்கு மடியர்வினை பரிவிற் றடிந்தருள்செய் பன்னி ருக ணுடையதேவே, தாரோங்கு மார்பனே தாய்வள்ளி காந்தனே தமியனேன் கவலைதீரோ. (க)

தீரனே வீரனே சேவலங் கொடியனே திருமாற் குகந்தமருகா
கீரனார் கவிதைக்கு முன்னுளி னருளினை கிரவுஞ்ச கிரிதடிந்தாய்
சூரனு கம்பிளந் தனைசுருதி முடிவெனுஞ் சூக்கும நவின்றனையெனப்
பேரனே கந்தமைப் பெற்றவா வடியனற் பேருறச் செய்தல்பெரிதோ.

(க) வண்டுநகரென்பதும் கரையேறவிட்டநகர்க்குரியபெயரே.

பெரிதுசிறி தென்பது நினக்கில்லை யென்பரிது பெரியரு
றுண்மையன்றோ, வரிதெனப் படுவதோர் பொருணினக் கில்லையென்
பதுமடிய னநுபவமதே, சரிதையிற் றவறிநற் கிரியையே யுணராத
தமியேனை யாண்டுவினைவிற், றிரிதலில் லாதநின் கருணைப்பிர சாத
முறுசீரேறு தொழில்களருளே. (௩)

அருளே யெனக்கும்வர மெனவேண்டி யன்போ டறைந்தவில்
வேழையுள்ளத், திருளே கெடுத்தொளிசெய் தேற்றத் திருத்துநின்
ணின்கருணை தானுமென்னே, தெருளே செறிந்தியல்பு தேர்ந்தே
துதிப்பவருள் செய்பா திரிப்புலிநகர்ப், பொருளே யெனும்பரமா
பெரியநா யகிபாகர் புகழ்புதல்வ கந்தவேளே. (௪)

கந்தவே ளேநின் கழற்கே சரண்வள்ளி காந்தா சரண்டிங்கள்
சே, ரந்தகன் காலரரு ளெந்தைநிற் கேசர னன்பரமா வண்டுநகா
வாழ், பந்தனை தவிர்த்துபத புண்டரிக சரணெனப் பத்திசெய் புத்தி
யீந்தே, நொந்தவெளி யேன்றனது சிந்தா குலஞ்செற்று நோக்கி
னரு ணல்லெனக்கே. (௫)

எனக்கினிய பன்னலமு மேற்றமுங் கொள்சிறப் பேய்ந்ததொ
ழில் களுமளித்தே, மனக்குறை யறுத்திதய மகிழுறச் செய்தனின்
வண்டகைக் கழகாகுமாற், சினக்குநெறி தவிர்கிலே னாயினுநீ ராட்
டியே தினமுமல ரணிவனிவையு, நினக்குரிய வாக்கினை தருணெ
றியி னிற்கவரு ணிகரிலாத் தீயனேற்கே. (௬)

நீயவனை யின்னுந் திகைக்குமா செய்யாது திருவருட் செல்வ
விளைவாம், நேயவகை யதனில்பஃ றோற்றங்கள் காட்டிமன நெகிழ்
வித்த வரதநினது, பாயவித மியாவுமென தகமறியு மன்றியெவர்
பண்பினிதை யுணர்வரினியுந், தோயவிடு நின்னடியர் தண்ணளியெ
னும்புதிய தூய்மைமிகு தீர்த்தமதிலே. (௭)

தூய்மையறி யாதவிந் நாயேற்கு நின்கருணை தோற்றுமா றுள
மன்னியே, நோய்மையி னழுந்திநின் பழனித் தலப்பதியி னாற்ற

பினா நுண்குறிப்பால், வாய்மைதகு திருவருணை வண்புரா வைத்
தால் வரத்தினைப் பெறவழங்குந், தாய்மையினு மரியநின் றண்ண
ளிச் செய்கையைச் சாற்றுத லெவாக்குமரிதே. (அ)

அரிதினினை வுற்றிடச் செந்தூரி லுதயத்தொ ரமரர்குல வைய
ருருவாய்ப், பரிதிபல் லாயிரம் புரையுநங் குமரனெவர் பத்தரவர்
டகைகளெவையுந், துரிதந்த டிந்திடுஞ் செங்கைவே லாயுதந் தோன்
றுநஞ் சொந்ததுரையின், சரிதம்வெண் டிருநீறு தன்திருக் கரம
தாற் சாதித்த தற்புதமரோ. (கூ)

அற்புதந் தானுமே யொன்றன்று சின்ன ளகன்றபின் குறுமு
னிவனுற், சொற்பத மகன்றமா லரனுருவி னைப்பெறுந் தூய்குறு
மதினின், னற்படையை நானிரவி லோதுழிச் செவியேற்ற நற்றரிசு
னந்தந்தனை, முற்பட வங்கநந்தவத் திருவடிச் சீருமுண் டிதவடிவு
மென்றுமறவேன். (௰)

மறவாது நின்திருத் துணையடிக ளைத்தினமும் வந்தித்து நின்ற
னனியான், பிறவாத நாளென்று மறிகிலே னின்னையே பேசாதிரு
ந்துமறியேன், பறவைபோற் றிரியாத மனமெனும் பெண்ணுமின் பாற்
கோரு மரியவரமும், துறவோாகள் கருணைநோக் கழுமளிப் புடன
ருள்க துன்பமணு காதசிரோ. (௧௧)

முற்றிற்று.

---

வாழ்த்து.

சீரோங்கு கற்பகநற் கயமுகத்தன் திருவடிகள் செவ்வி காட்ட,
நீரோங்கு கடன்மிதப்பக் கல்லூர்ந்த நிறைமொழிய னேசங் கூட்
டப், பேரோங்கு சொக்கலிங்கன் பெருந்தவத்தா லமைத்தவெழிற்
சிகரிக் கோயி, லூரோங்கு மடங்கூப நந்தனநல் லறம்வாழ்க நாளு
மாதோ.

பழனியாண்டவர் திருவடிவாழ்க.

---